بسم الله الرحمان الرحيم

# " ஹுஸ்ஸாம் அல் ஹரமைனின் ஆகாசப் புழுகு "



ummathemuhammedhiya



tamil
ummathemuhammedhiya



# ஹூஸ்ஸாம் அல் ஹரமைனின் ஆகாசப் புழுகு

வடஇந்தியாவில் அஃலா ஹஜ்ரத் என்று அழைக்கப்படும் அஹ்மத் ரிழா கான் பரேல்வி [1856-1921] அவர்கள் அரபியில்'ஹூஸாம் அல் ஹரமைன் அலா முன்ஹிர் குப்ர் வல் மைன்' என்னும் நூலை எழுதினார்கள்.

அல்லாஹ் குர்ஆனில் இப்படி கூறியிருக்க :

ذٰلِكَ الْكِتٰبُ لَا رَيْبَ فِيْهِ هُدًى لِّلْمُتَّقِيْنَۙ

2:2. இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும்.

பரேலவிகள் தங்கள் கிதாபில் "ஹுஸாமுல் ஹரமைனில்" சந்தேமில்லை பயபக்தியுடையோருக்கு இது நேர்வழிகாட்டியாக உள்ளது !!

[அஸ்ஸவாரிமுல் ஹிந்தியா]

என்றும் அல்லாஹ்வின் மீது பயமில்லாம் எழுதியுள்ளார்கள்.

இந்நூலை எழுதுவதற்க்கு முன்பு. மௌலவி முஹம்மது இஸ்மாயில் திஹ்லவி (ரஹ்)எழுதிய நூலான 'தக்வியத்துள் ஈமான்' இதன் பின் 1874ல் தேவ்பந்த் மதரசாவைச் சார்ந்த மௌலவி காசிம் நானுத்வி(ரஹ்) 'தஹ்தீருன் நாஸ்' என்னும் நூலையும், அதைப் போலவே 1887ல் மௌலவி கலீல் அஹ்மத் அம்பேத்வி(ரஹ்) 'பராஹீனே காத்தியா ' என்னும் நூலையும், பின்னர் 1901ல் மௌலவி அஷ்ரப் அலி தானவி(ரஹ்) 'ஹிப்ழுள் ஈமான்' என்னும் நூலையும் , மௌலவி ரஷீத் அஹமத் கங்கொஹி(ரஹ்) 'பதாவா ரஷீதியா' என்னும் விரிவான நூலையும் எடுத்துக்கொண்டு

1905ல் தமது ஹஜ் கடமைகளை நிறைவேற்ற ஹிஜாஸ் சென்ற அவர் மக்கா,மதீனாவைச் சார்ந்த உலமாக்களிடம் 'அல் முதாமத் அல் முஸ்தனத்' என்ற புணைத்து கூறப்பட்ட ஒரு வரைவு ஆவணத்தை ஹிஜ்ரி 1323ல் வழங்கினார்.

அஹ்மத் ரிழா கான் ஹிஜாஸ் உலமாக்களின் கருத்துக்களைச் சேகரித்து அவற்றை சுருக்கமாகத் தொகுத்து அரபு மொழியில் 'ஹுஸாமுல் ஹரமைன்' என்று தலைப்பிட்டார். இந்த தொகுப்பு ஹிஜாஸ் மாகாணத்தின் 33 உலமாக்களின் தீர்ப்புகளை உள்ளடக்கியது. இவர்களின் கொள்கை அனைத்தும் நிராகரிப்புக்கு வழிவகுக்கும் என்ற ஒருமித்தகருத்தின் அடிப்படையில் கொடுத்தார்கள். மக்கா,மதீனாவின் உலமாக்கள் தப்லீக் உலமாக்களை இஸ்லாத்தை விட்டும் நீங்கியவர்கள் என்று பத்வா வெளியிட்டனர் .

இந்தியா திரும்பிய பின் இந்த பத்வா ஹிஜ்ரி 1324 ல் 'ஹுஸாம் அல் ஹரமைன் அலா முன்ஹிர் குப்ர் வல் மைன்' என்று வெளியிடப்பட்டது . மேலும் , இந்த பத்வா அரபியிலும், உர்துவிலும் அவரின் மருமகன் , ஆன மௌலவி ஹஸ்னைன் ரிழா கான் பரேல்வி அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டும் இந்தியாவில் வெளியிடப்பட்டது . இவ்வாறு பத்வாவை வெளியிட்டு வெற்றிவிழா கொண்டாடிக்கொண்டிருக்கும் போது தான் "பரேல்விகளை" அதிர்ச்சியடைய செய்யும் சம்பவம் நடந்தது. (கவனமாக படிக்கவும்)

மௌலானா மதனி (ரஹ்) அவர்கள் வீசிய எரிநட்ச்சத்திரம்...

அண்மை காலத்தில் தோன்றிய மௌலானா மதனி (ரஹ்) அவர்கள் "அஷ்ஷிஹாபுத் தாகிப்" என்ற ஒரு நூல் தொகுத்துள்ளார்க ள். நூல் தனது பெயருக்கேற்ப இந்த பரேலியர்களைத் தாக்கித் தகர்த்தெரியும் எரி நட்ச்சத்திரமாகவே அமைந்துள்ளது. அனைவரும் படிக்க வேண்டிய நூல். மதனி (ரஹ்) அவர்கள் இன்நூலில் அரபு நாட்டு ஆலிம்கள் பரேலியர்களைப் பற்றி கூறிய இறுதி அபிப்ராயங்களையு ம், இவர்களது தலைமை பீடமான அஹ்மத் ரஜாகானுக்கு அங்கு நேர்ந்த அவமான நிகழ்ச்சிகளையும் எழுதி, இவர்களது மாபெரும் புரட்டு வேளைகளைப் பற்றி ஆதாரத்தோடு, ஆணித்தரமாக எடுத்தெழுதியுள் ளார்கள். தேவ்பந்த் பெரியார்கள் மீது கூறப்படும் குற்றச்சாட்டுக் களுக்குறிய தெளிவான பதிலையும் இதில் காணலாம்.

குற்றச்சாட்டுக்ககள் பிறந்த கதை.....

கூறப்படும் குற்றச்சாட்டுக் கள் அனைத்தும் இங்கு யாராலும் கண்டுபிடிக்கப்ப ட்டவை அல்ல என்பது மாபெரும் உண்மை! வட நாட்டில் பரேலி என்ற ஊர் இருக்கிறது. அங்கு பித்அத்தைப் பேணி வளர்க்கும் சிலர் உள்ளனர். அங்கும் தேவ்பந்தில் இருப்பது போல் " தாருல் உலூம்" என்ற பெயரில் அரபிக் கலாசாலை ஒன்று இருக்கிறது. (அப்படி ஒன்று இருப்பது அநேகமாக யாருக்கும் தெரியாது) அந்தப் பரேலிப் பெரியார்கள் தேவ்பந்த் இன்னும் அதனைச் சார்ந்த ஆலிம்களை (சுன்னத்துக்கு மாறு செய்வதை கண்டிக்கும் காரணத்தால்) வஹ்ஹாபிகள் கூறிச்சாடும் பழக்கமுள்ளவர்கள். (அங்கும் தேபந்த் ஆலிம்களை ஆதரிக்கும் அநேக பெரியார்கள் உள்ளனர்.)

மறுப்பாளர்களின் ஆதார நூலான " ஹுஸாமுல் ஹரமைனின்" அந்தரங்கம்....

மேற்கண்ட பரேலியர்கள் உண்மையில் ஆங்கிலேயே ஆட்ச்சியினரால் தூண்டிவிடப்பட்ட வர்கள். தேவ்பந்த் இன்னும் அதனைச் சார்ந்த ஆலிம்கள் ஆங்கிலேயரை எப்படி எதிர்த்துப் போராடி, சுதந்திரப் போராட்டத்திற்கே தலைமையாயிருதனர் . என்பதை சரித்திரம் இன்றும் கூறுகிறது. அப்போது ஆங்கிலேயர்கள் இந்த ஆலிம்களுக்கு எதிராக பரேலியர்களைத் தூண்டிவிட்டனர். அது சமயம் பரேலியர் செய்த சூழ்ச்சிகளில் ஒன்று தேவ்பந்த் பெரியார்களின் நூற்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டு மக்கா, மதீனா போய் அங்குள்ள பெரியார்களிடம் அவற்றில் உள்ள சில வாசகங்களையும் காண்பித்து. இவர்களது கொள்கைகளைப் பற்றி திரித்துக் கூறி எப்படியோ இதை எழுதியவர்கள் காபிர்கள் என்று "பத்வா" வாங்கிக் கொண்டு வந்து விட்டனர். பிறகு அதை "ஹுஸாமுல் ஹரமைன்" என பெயரிட்டு நூல் வடிவில் வெளியிட்டு வெற்றிக் கொடி நாட்டிய அச்சயமத்தில் நடந்தது என்வென்று தெரியுமா? பத்வா கொடுத்தஅரபு நாட்டு ஆலிம்களுக்கு உண்மை தெரிந்துவிட்டது .இவர்கள் நம்மைஏமாற்றி சென்று விட்டடனர் என்பது அவர்களுக்கு தெரிந்து விட்ட போது அவர்கள் தேவ்பந்த் ஆலிம்களுக்கு இது சம்பந்தமாக விளக்கம் எழுதிக் கேட்டனர்.

" ஹுஸாமுல் ஹரமைனுக்கு மறுப்பு"அரபு ஆலிம்களின் கையெழுத்தோடு அப்போது உயிருடன் இருந்த ஹஜ்ரத் மௌலானா கலீல் அஹ்மத் சாஹிப் அம்பேட்டவி அவர்கள் அத்தனை விஷயங்களுக்கும் தெளிவான ஆதாரத்தோடு விளக்கம் எழுதி தங்களது உண்மையான கொள்கை என்ன? என்பதை அரபி மௌழியில் முறையாகத் தொகுத்து இந்திய நாட்டு பிரபலமான ஆலிம்களின் அங்கிகாரக் கைய்யெழுத்துக்க ளையும் பெற்று அரபு நாட்டுக்கு அனுப்பி வைத்தார்கள் அந்த ஆலிம்கள் உண்மையான கொள்கை விளக்கத்தைக் கண்ட போது "இக் கொள்கையே சரியானவை இதுவே நேர்வழி என்று அங்கிகாரமளித்தன ர்.மக்கா ,மதீனா , மிஸ்ரு, ஷாம் ஆகிய நாடுகளைச் சேர்ந்த உலமாக்கள் பலர் அதில் கையெழுத்திட்டுள்ளார்கள்.

இந்த பத்வா நூல் வடிவில் "அல்முஹன்னத் - அலல் முபன்னத்" என்ற பெயரில் அச்சாகி வெளிவந்துள்ளது.இன்னும் உருதுவில் "அகாயிதே உலமாயி தேவ்பந்த்" என்ற பெயரில் வெளியாகிகொண்டிருக்கிறது. இப்போது தமிழிழும் வெளியாகிக்கொண்டிருக்கிறது .

"அல் முன்ஹன்னத் அலா அல் முபன்னத்" ல் கையெழுத்திட்ட உமாகளின் பெயர் பட்டியல்.

மக்கா உலமாக்கள்.

1) ஹஜ்ரத் மௌலான அல் சேக் முஹம்மத் சயீத் பா பஸீல் அல் சாபியீ.

[மக்கா உலமாகளின் சேக்,கதீப் மஸ்ஜித் உடைய இமாம்]

2) மௌலானா அல் சேக் அஹமது ரஸீத் அல் ஹனபி .

3) அல் சேக் முஹீபுத்தீன் அல் மக்கீ அல் ஹனபி.

4) அல் சேக் முஹம்மண் சித்தீக் அல் அப்கானி அல் மக்கி .

5) ஹஜ்ரத் மௌலானா அல் முஹம்மது ஆபித்.[மாலிகி மத்ஹபுடைய முப்தி].

6) ஹஜ்ரத் மௌலான முஹம்மது அலீ பின் ஹுஸைன் அல்மாலிகி.

[ஹரம் ஸரீபுடைய ஆசிரியர்]

மதினாவில் உள்ள உலமாகள்.

7) ஹஜ்ரத் மௌலான சையத் அஹமது பர்ஜன்ஜீ அல் சாபியீ.

8) சேக் ரஸூனி உமர்.

[ஹிஜ்ரி 1322 ல் மதரஷா அல் ஸபாவின் ஆசிரியர்]

9) முல்லா முஹமமது கான்.

[ஹிஜ்ரி 1326 ல் புஹாராவில் ஹனபி மத்ஹபின் அறிஞர் மற்றும் மஸ்ஜிது நபவியின் ஆசிரியர்]

10) சைக் பைத் அல் கரீம் கலில் பின் இப்ராஹீம்.

11) அல் சையித் அஹமத் அல் ஜஜைரி.

[மாலிகி மத்ஹபின் சேக்]

12) சேக் உமர் பின் ஹம்தான் அல் மஹ்ரஷீ.

13) சேக் முஹம்மது ஜகீ அல் பர்ஜன்ஜீ.

14) சைக் முஹம்மது அல் அஜீஜ் அல் பஜீர் அல் துனிசி.

15) சேக் முஹம்மது அல் சூசி அல் கியரி.

16) சேக் அஹமது பின் அல் மாமூன் அல் அல் பல்கீஸ்ஹிஜ்ரி 1328.

17) சேக் முஹம்மது தவ்பீக்.

18) சேக் மூஸா கதிம் பின் முஹம்மது.

[ பாபுஸ் ஸலாம் மதரஸாவின் ஆசிரியர்]

19) சேக் அஹமது பின் முஹம்மத் கைர் அல் ஹாஜ் அல் அப்பாஸி.

20) சேக் இப்னு நுமான் முஹம்மது மன்சூர்.

21) சேக் மஸூம் அஹமது சையத்.

22) சேக் அப்துல் அல் காதிர் பின் முஹம்மது.

23) சேக் யாஸீன் அல் பர்ற அல் டிமஸ்கீ.

[ஹிஜ்ரி 1326]

24) முல்லா அப்துல் ரஹ்மான்.

[ஹரம் ஸரீப் ,நபிவினுடைய ஆசிரியர்]

25) சேக் மஹ்மூத் அப்துல் ஜவ்வாத்.

26) சேக் அஹமது பிஸாதீ.

27) சேக் முஹம்மது ஹஸன் சிந்தி.

28) சேக் அஹமது பின் அஹமது அஸாத்.

29) சேக் அப்துல்லா அல் நப்லுஸீ அல்ஹம்பலி.

[ஹிஜ்ரி 1328]

30) சேக் முஹம்மது பின் உமர் அல் புலானி.

31) சேக் அஹமது இப்னு முஹம்மது கைர் அல் சன்கிதி அல் மாலிகி அல் மதனி.

[ஹிஜ்ரி 1328]

ஸாம், அஜர் ,கேய்ரோ ,எகிப்து உலமாகள்.

32) ஹஜ்ரத் அல் சேக் சலீம் அல் பஸரி.[அல் அஹஜரின் உலமாகளின் சேர்]

33) சேக் முஹம்மது இப்ராஹிம் அல் கயானி.

34) சேக் சுலைமான் அல் அப்த்.

சிரியாவிலுல்ல உலமாகள்.

35) ஹஜ்ரத் மௌலான அல் சையித் முஹம்மது அபுல் கைர், இப்னு ஆபிதீன் அல் அல்லாமா அஹமது இப்னு அப்துல் கனி இப்னு உமர் ஆபிதீன் அல் அஸனி நக்ஸ்பந்தி அல் டமக்ஸ்ஸி அல்ஹனபி.

[ஹனபி மத்ஹபின் அறிஞர் ,ஹதீஸ் கலை வள்ளுனர் ,பதாவா அஸ்ஸாமியாவின் ஆசிரியர்]

36) அல் சேக் முஸ்தபா இப்னு அஹமது அல் ஸத்தி அல் ஹம்பலி.[ஹதீஸ் கலை வள்ளுனர்]

37) அல் சேக் மஹ்மூத் ரஸீத் அல் அத்தர்.

[ஹதீஸ் கலை வள்ளுனர்]

38) ஹஜ்ரத் அல் சேக் முஹம்மது அல் பஸீ அல் ஹமவி.

39) ஹஜ்ரத் அல் சேக் முஹம்மது ஸயீத் அல் ஹமவி.

40) ஹஜ்ரத் அல் சேக் அலி இப்னு முஹம்மது அல் தலீல் அல் ஹமவி .

41) அல் பாதில் அல் இமாம் அல் ரப்பானி ஹஜ்ரத் அல் சேக் முஹம்மது அதீப் அல் ஹுரானி.

42) ஹஜ்ரத் அல் சேக் அப்துல் காதிர்.

43) ஹஜ்ரத் அல் சேக் முஹம்மது ஸயீத்.[ஹிஜ்ரி 1329]

44) ஹஜ்ரத் அல் சேக் முஹம்மது சயீத் லுத்பீ அல் ஹனபி.

45) சேக் பரீஸ் இப்னு முஹம்மது அல் ஹமவி .

46) ஹஜ்ரத் அல் அல் சேக் முஸ்தபா அல் ஹத்தாத்.

